# என்னைக் கவர்ந்த கர்நாடக இசை!

## - கர்நாடக சங்கீத விதூஷி மங்களம் சங்கர்

கர்நாடக இசைத் துறையில் கடந்த 40 ஆண்டு காலமாக பிரகாசித்துக் கொண்டிருப்பவரும், சிறந்த பல விருதுகளைப் பெற்றவரும், அரிய ராகங்களில் அமைந்த பாடல்களைத் தொகுப்பதில் தனக்கென்று ஒரு தனித்திறமை கொண்டு விளங்குபவருமாகிய சங்கீத ரத்னா திருமதி மங்களம் சங்கர், பெண்மணிக்காக அளித்த சிறப்பு பேட்டி:

திருச்சி அருகேயிருக்கும் அங்கரை கிராமத்தை பூர்வீகமாகக் கொண்ட எனது தகப்பனார் அன்னதானம், டெல்லியில் புகழ்பெற்ற சார்ட்டர்ட் அக்கவுண்டன்ட்டாக ஆக திகழ்ந்தவர். கன்னா மற்றும் அன்னதானம் என்கிற பெயரில் நிறுவனமொன்றை அமைத்து திறம்பட நடத்தியவர்.

என் தாயார் ஜானகி, திருச்சி அருகே உள்ள வாலடியில் பிறந்தவர். கர்நாடக இசை மிகவும் பிடிக்குமாதலால் சங்கீதம் மற்றும் வயலினை, புகழ்பெற்ற லால்குடி ஜி.ஜெயராமனின் புதல்வர் லால்குடி கோபால் ஐயரிடம் கற்றார்.

எனது குரல் உணர்ச்சிபூர்வமான தனிப்பட்ட குரலென்று கூறுவார்கள். எனது புகுந்த வீடும் இசைக் குடும்பம். மாமியார் கலைமாமணி கற்பகம் சுவாமிநாதன் வீணை வாசிப்பதில் வல்லவர். என் இசைக்கலைக்கு நல்ல ஆதரவினை அளித்தனர்.

### இசைப் பயிற்சி, குரு குறித்த விவரங்கள்....?

ஆரம்ப காலத்தில் குருவாக என் தாயார் இசையைக் கற்றுக் கொடுத்தார். அப்போதே சில இசைப் போட்டிகளில் பங்கேற்று பரிசுகள் வாங்க ஆரம்பித்துவிட்டேன். பின்னர், காலம் சென்ற சங்கீத கலாநிதி டி.எம்.தியாகராஜன் குருவாக கிடைத்தது இறையருள் ஆகும். 30 வருட காலம் அவரிடம் தொடர்ச்சியாக நேரடி பயிற்சி பெற்றேன்.

குரு டி.எம்.தியாகராஜன், தஞ்சாவூரைச் சேர்ந்த புகழ்பெற்ற குடும்பத்தில் பிறந்தவர். இவருடைய தாத்தா, கொள்ளுத் தாத்தா ஆகியோர் பரோடா சமஸ்தானத்தில் ஆஸ்தான வித்வான்களாக பணி புரிந்தவர்கள். இன்றும் இவரது குடும்ப வம்சாவளி வதோதராவில் ''தஞ்சாவூர்காரர்'' என்கிற பெயருடன் வாழ்ந்து வருகின்றனர். எனது குருவும், முதலில் தனது தந்தையாரிடம் சங்கீதம் கற்றபின், இசைமேதை செம்மங்குடி ஸ்ரீனிவாச ஐயரின் சிஷ்யராக இருந்து, சங்கீதத்தில் மேற்பயிற்சி எடுத்து இசைக் கலைஞராகியவர். என் சங்கீதத்திற்கு நல்ல அஸ்திவாரம் போட்டு, மெருகூட்டி, திறமைகளை வளரச் செய்து அநேக பாராட்டுகளைப் பெற உதவிய குரு இவரேயாவார்.

தமிழ்நாடு இசைக் கல்லூரியில் பயின்று சங்கீத வித்வான் இசைக் கலைமணி பட்டம்

பெற்றேன். ஆசிரியர் கற்பித்தல் முறையை கற்றறிந்தேன்.

1980-ல் இந்திய அரசின் கலாச்சாரத் துறை, சங்கீதம் பாடுவதில் சிறந்தவரென என் பெயரை அறிவித்து மேற்பயிற்சி எடுக்க உதவித் தொகை அளித்தது.

பத்மவிபூஷண் டி.கே.பட்டம்மாள், சங்கீத கலாநிதி டி.கே.ஜெயராமன் ஆகியோரிடம் மேலும் பயின்றேன். எனது துடிப்பான குரல், கேட்பவர்களை ஈர்த்தது பரதநாட்டியப் பாடல்களுக்கு இசை அமைத்ததோடு, கர்நாடக இசையை உலகெங்கும் பரப்புவதில் ஈடுபட்டேன்.

## மாணவர்களை அணுகும் தன்மை பற்றி...?

மாணவர்களுக்கு இசையின் மீதுள்ள ஆர்வத்தினை வெளிக்கொணர, சரியான தொழில்நுட்ப அடித்தளம் தேவை. அதை சரியாக கொடுப்பதின் மூலம், அவர்களுக்கு சங்கீதம் பிடித்துப் போய், திறமைகள் தானாகவே வெளிச்சத்திற்கு வருகின்றன. பாரம்பரிய சங்கீதத்தை மதிப்பவளாதலால், சாகித்ய உச்சாரம், ஸ்வரஸ்தானம், தாளக் கட்டு ஸ்வரங்களைப் பாடுகையில், மூச்சுக் கட்டுப்பாடு போன்றவைகளை மாணவர்கள் கவனமாக பயிலும் பொருட்டு, சில சமயங்களில் கண்டிப்பு காட்டுவதுண்டு. பெரிய பாடல்களைப் பாடுவதற்கு சங்கீதத்தில் ஆழமான அடித்தளம் தேவை.

இன்றைய காலகட்டத்தில், சில மாணவர்கள் மேடையில் பாடுவதற்கு மட்டும் என்ற குறிக்கோளுடன் சங்கீதம் பயில்வது முறையல்ல. ஆத்மார்த்தமாகப் பாட, நல்ல பயிற்சி இன்றியமையாதது. மேலும் பொறுமையான அணுகுமுறைகளும் மாணவர்கள் முன்னேற வழிவகுக்கும்.

என்னுடைய மாணவர்களில் அநேகர் மேடைக் கச்சேரிகள் செய்து வருகிறார்கள். என்னிடம் பயின்ற இசை சம்பந்தமான பாட விளக்கங்களை இளைய சமுதாயத்திற்கு கற்றுக் கொடுக்கின்றனர். ஆல் இந்தியா ரேடியோவில் கிரேடட் ஆர்டிஸ்ட்களாக விளங்கி வருகின்றனர்.

இந்தியா மற்றும் வெளிநாடுகளில் இருக்கும் மாணவர்களுக்கு பலவருட காலமாக கற்றுக் கொடுத்து வருகிறேன். கலாஷேத்ரா சென்னை, இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ் சொசைட்டி - சிங்கப்பூர், ரங்கஸ்ரீ கலிபோர்னியா, ஸ்ருதிலயா டொரண்டோ (கனடா) போன்ற அமைப்புகளின் வழியே இசை பயிலும் மாணவர்களுக்கு கற்பித்து வருகிறேன்.

சங்கீதத்தில் பி.ஏ., எம்.ஏ., எம்.பில் பட்டம் பெற, பல மாணவர்களுக்கு உதவி செய்துள்ளேன்.

டாக்டர் பிரியாஸ்ரீ, டாக்டர் பிரியதர்ஷிணி, ஜோதிஷ்மதி, திருமதி லீலா ஜெயராமன், திருமதி சுந்தரி சேகர் ஆகியோர் எனது சிஷ்யர்கள் ஆவார்கள்.

## உங்களுடைய சிறப்பம்சம்...?

பல்வேறு இசை அமைப்பாளர்கள், சங்கீத வித்வான்கள், இசை அமைத்த அரிய பாடல்களைத் தொகுப்பதாகும். கருத்துள்ள இசை நிகழ்வுகளை நடத்துகையில், நீலகண்ட சிவன், நாராயண தீட்சிதர், புரந்தரதாஸர், பெரியசாமி தூரன், பாப நாசம்சிவன், கோபால கிருஷ்ண பாரதி போன்றவர்களின் பாடல்களையும், முருகன், சிவன் சம்பந்தப்பட்ட பாடல்களையும் பாடுவது வழக்கம்.

ஒருசமயம் எனது மாணவரொருவன், மகாராஜா ஜெய சாமராஜேந்திர உடையார் எழுதிய அரிய ராகமான போக வசந்தத்தைக் கேட்டு அதைக் கற்க விரும்பி என்னிடம் கேட்டான். இது குறித்து ஆராய்ந்ததில், அநேக சிறப்பான பாடல்களை எழுதியிருப்பதும், அவைகள் அதிக அளவில் பிரபலமாகாததும் பற்றித் தெரிய வந்தது.

என்னுடைய மாணாக்கர்களுக்கு அப்பாடல்களில் சிலவற்றைக் கற்றுக் கொடுக்க விரும்பினேன். அவற்றை குறிப்புகளோடு புத்தகமாகவும், ஆடியோவாகவும் வெளியிட்டால், மாணாக்கர்கள், இதர இசைக் கலைஞர்கள் மேடையில் பாட உதவியாக இருக்குமென எண்ணினேன்.அன்றைய கால கட்டத்தில், எனது குரு டி.எம்.தியாகராஜன் எழுதிய கீர்த்தனைகளை குறிப்பீடுகளுடன் புத்தகமாக வெளியிட உதவியாக இருந்திருக்கிறேன். இது சங்கீதம் பயில்பவர்களுக்கு பயன்படும் வகையில் அமைந்துள்ளதால், நன்கு விளங்கும். கற்பதற்கு சுலபமாக இருக்கும். இதன் மூலம், குருவின் பாடல்களுக்கும் அழகான உயிரோட்டம் கிடைத்துள்ளது. அநேக கேசட்டுகளையும் வெளியிட்டு இருக்கிறேன்.

## "கீத கானாம்ருதம்" புத்தகம் வெளியிடத் தூண்டியது ...?

இது எனது முதல் புத்தகமாகும். மைசூர் ராஜ வம்சத்தின் மகாராஜா உடையார் இசையமைப்பதில் தரமானவர். கர்நாடக இசை வகையில் சுமார் 90 பாடல்களை எழுதி இசையமைத்துள்ளார். சுத்த லலிதா, போகவசந்தம், பிரதாப வராளி போன்ற அரிய ராகங்களின் கலவையையும் மிஸ்ர ஜம்பா, சதுஸ்ர த்ருவா, கண்ட திரிபுட போன்ற தாளங்களையும் கொண்டது. இவர் ஸ்ரீ வித்யா உபாசகர். அதனால், தேவியைக் குறித்தும் அநேக பாடல்கள் எழுதப்பட்



டுள்ளன. அவற்றிலிருந்து 31 பாடல்களைத் தேர்வு செய்து தமிழில் குறிப்பீடுகளையும், பாடல்களின் ஆடியோவையும் கொண்டு வெளியிடப்பட்ட புத்தகம் கீத கானாம்ருதம். இது ஒரு எளிமையான முயற்சி. இதில் இருக்கும் குறிப்பீடுகளும், ஆடியோ பதிவுகளும், திறமை வாய்ந்த சங்கீத கலைஞர்கள், ஆர்வலர்கள் வழியே பரந்து விரியும். கர்நாடக இசை உலகில் பெரிய கவனத்தை உருவாக்கும்.

### வாங்கிய விருதுகள்...?

சங்கீத ரத்னா, இசைக் கலைமணி சங்கீத வித்வான், இசைத் தென்றல் ஆகிய பலவற்றைக் கூறலாம்.

### நினைவில் நிற்கும் நிகழ்வுகள்...?

சென்னை மியூசிக் அகாடமியில், ஒவ்வொரு ஆண்டும் ஜனவரி மாதம் 'சதஸ்' எனும் நிகழ்வு நடப்பது வழக்கம். அந்நிகழ்வு சமயம் சங்கீத கலாநிதி விருது வழங்குவார்கள். நிகழ்விற்கு முன்பாக, கர்நாடக இசைப் போட்டிகள் வைப்பது ண்டு. ஸ்ரீதியாகராஜர், தீட்சிதர் மற்றும் மாடர்ன் கிருதிகள் என பல்வேறு வகையில் போட்டிகள் நடைபெறும். அனைத்திலும் நான்கலந்து கொண்டு சிறப்பாகப் பாடுவேன்.

அந்த வருடம் டாக்டர் எம்.பாலமுரளி கிருஷ்ணாவிற்கு ''சங்கீத கலாநிதி விருது'' அளிக்கப்பட்டது. போட்டிகளில் வெற்றி பெற்றவர்களுக்கு, பரிசுகளை அவர் வழங்க ஆரம்பித்தார்.

அநேக போட்டிகளில் வெற்றிபெற்று இருந்தால், எனது பெயரை பரிசு வாங்க வருமாறு அடிக்கடி அழைக்கையில், மேடைக்கு சென்று - சென்று வந்தேன். அப்போது அவர், ''இங்கேயே இரும்மா! போய் - போய் வர வேண்டாம்'' நன்னா பாடினே!'' என்று என்னிடம் கூறியதும், மிக மகிழ்வாகவும், ஆச்சரியமாகவும் இருந்தது.

என் குருநாதர் டி.எம்.தியாகராஜன், எனது மேடைக் கச்சேரியைக் கேட்டு, ''மனசு குளிர்ந்திச்சு'' என்று சொன்னது சந்தோஷமாக இருந்தது,. பொதுவாக அவர் இவ்வாறு கூறுவது கிடையாது.

அநேகமாக எனது மேடைக் கச்சேரிகள் சமயமெல்லாம் மழைக் கண்டிப்பாக பெய்யும்.

### இதர பொழுது போக்குகள்...?

ஷாப்பிங் செல்வது, நல்ல இசையைக் கேட்பது, வித விதமான புடவைகளை வாங்குவது இத்யாதி..

### வேறு ஏதாவது கூற விரும்புகிறீர்களா?

இசைக் கலைஞர் மற்றும் இசை அமைப்பாளர் மகேஷ் மகாதேவ் மிகவும் பிரபலமானவர் கர்நாடக இசை மற்றும் இந்துஸ்தானி இசையில் 45க்கும் மேற்பட்ட அரிய ராகங்களை உருவாக்கியுள்ளார்.

தற்சமயம், எனது குருநாதர் டி.எம். தியாகராஜன் மற்றும் அவரது தலைசிறந்த சிஷ்யையாகிய எனக்கும் மரியாதை செலுத்தும் வண்ணம் ''தியாகராஜ மங்களம்'' எனும் ராகத்தை உருவாக்கி இசை வீடியோ வெளியிட்டுள்ளார். இது மிகவும் பெருமைக்குரிய விஷயமாகும். இதன் விருத்தத்தை மகேஷ் அருமையாக பாடியுள்ளார். குருவருளும், இறையருளும், பெரியோர்களின் ஆசிகளூம், குடும்பத்தினரின் ஆதரவும், ரசிகர்களின் பாராட்டுகளும் எனது முன்னேற்றத்திற்கு உற்ற துணையெனக் கூறி விடை பெற்றார்.

**- ஆர்.மீனலதா, மும்பை**